# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 50 திருவள்ளுவர் ஆண்டு 2055, ஆடவை – சூலை – 2024








அருந்தமிழ் காக்கும் அகர முதலிக்(கு)
அருஞ்சிறப்(பு) ஆண்டுஐம்ப∴(து) ஆமே! – பொருத்த(ம்)
இருந்தமிழ்ச் சொல்வயலு(ம்) இங்கிதழ்ஐம் ப∴தால்
பெரும்புகழ் பெற்றதென்று பேசு

–பொறுப்பாசிரியர்

# சட்டத் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Abettor | குற்ற உடந்தையர் |
| Absolute property | முழு உரிமைச் சொத்து |
| Actionable claim | வழக்காடு கோருரிமை |
| Adjective law | நடைமுறைச் சட்டம் |
| Adverse witness | எதிராகச் சான்றளிப்பவர் |
| Alienation act | உரிமை மாற்றுச் சட்டம் |
| Archival law | ஆவணக்காப்புச் சட்டம் |
| Appeal suit | மேல்முறையீட்டு வழக்கு |
| Child witness | குழந்தைச் சான்றாளர் |
| Civil action | உரிமையியல் நடவடிக்கை |
| Confidential records | கமுக்கப் பதிவுகள் |
| Criminalistics | குற்ற ஆய்வியல் |
| Domestic laws | உள்நாட்டுச் சட்டங்கள் |
| Eye witness | காட்சிச் சான்றாளர் |
| Felonry | கடுங்குற்றவாளியர் |
| Formal enquiry | முறைசார் உசாவல் |
| Land acquisition act | நிலம் கைப்பற்றுகைச் சட்டம் |
| Lawful orders | சட்ட முறை ஆணை |
| Legal documents | சட்ட ஆவணங்கள் |
| Legal methods | சட்ட ஆய்வு முறைகள் |
| Legal procedures | சட்ட நடைமுறைகள் |
| Life convict | வாழ்நாள் சிறையாளி |
| Parole period | சிறைவிடுப்புக் காலம் |
| Restraining order | கட்டுப்படுத்தும் ஆணை |
| Verbal order | வாய்மொழி ஆணை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, ஆடவை (ஆனி)
சூலை – 2024

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai-28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

தமிழ் சொல்வளம் மிக்க மொழி மட்டுமன்று; பொருளாழம் மிக்க மொழியும்கூட. தமிழில் 'தொகை' என்பதற்கு, 'கூட்டம், சேர்க்கை, விலங்கு முதலியவற்றின் திரள், கொத்து, மொத்தம், பணம், எண், கணக்கு, கூட்டல், தொகுத்துக் கூறுகை, தொகைச் சூத்திரம், உருபு முதலியன மறைகை, ஆசிரியம், ஐம்புலன்களின் கூட்டத்தாலாகிய ஆதன், புலவர் கழகம், கலந்திருப்பதை இனம் இனமாகப் பிரித்தெடுக்கை, எட்டுத்தொகை – பத்துப்பாட்டு என்னும் நூல்கள்' எனப் பலப் பொருள்கள் உள்ளன. இப்படி ஒரு சொல்லுக்கே பல பொருள்களைக் கொண்ட எண்ணற்ற சொற்கள் தாய்த்தமிழில் நிறைந்திருக்கின்றன. அப்படியான சொற்கள் எல்லாம் தமிழ்மொழியின் தொன்மையையும் பெருமையையும் பறைசாற்றும் சான்றுகளாகும்.

இத்தகைய சொற்களையும் அவற்றுக்கான பொருள்களையும் காலந்தோறும் பாதுகாப்பதில் அகராதிகள் முதன்மையான பங்காற்றுகின்றன. இன்றைய அறிவியல் உலகில் அகராதி நூல்களை எப்போதும் கையிலெடுத்துச் செல்ல வேண்டிய தேவையில்லை. மின்னகராதிகள் நம் திறன்பேசி வழியாக எப்போதும் பயன்பட காத்திருக்கின்றன.

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் 'சொற்குவை' வலைத்தளத்தில் 15,32,717 சொற்கள் உலக மக்களின் பயன்பாட்டிற்காகப் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இந்த வலைத்தளத்தைப் பயன்கொண்டால், ஒரே நேரத்தில் பல அகராதிகள் தரும் பொருள்விளக்கத்தைப் பெறமுடியும். ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்களையும், தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும் 'சொற்குவை' வலைத்தளம் வழியாகப் பெற்றுப் பயன்படுத்தலாம். 'தொகை' ஏதும் கட்டத் தேவையில்லை.

'தொகை' என்ற சொல்லை அடிப்படையாக வைத்து, கட்செவியில் தமிழன்பர் ஒருவர் எழுதிய செய்தியைப் படித்த போது, தமிழின் சொல் நுட்பம் உணர்ந்து வியந்தேன். இதோ அந்தச் செய்தி...

"ஓர் ஊரில் நண்பர்கள் இருவர் இருந்தார்கள். இருவருமே சொற்பொழிவாளர்கள். பட்டிமன்றம், வழக்காடு மன்றம் , கவியரங்கம் உள்ளிட்ட பல்வேறு நிகழ்ச்சியில் இருவருமே கலந்து கொள்வது வழக்கம்.

மேடைப்பேச்சு முடிந்ததும் விழாக் குழுவினர் அளிக்கும் மதிப்பூதியத்தை ( பணத்தை)ப் பெற்றுக் கொண்டு செல்வர். அப்படிச் செல்லும் போது " என்ன இன்று அகநானூறா? குறுந்தொகையா? என்று ஒருவரை ஒருவர் மாற்றி மாற்றி கேட்டுக் கொள்வர்.சில சமயம் 'அகநானூறு' என்றும், சில சமயம் 'குறுந்தொகை' என்றும் சொல்லிக் கொள்வர்.

இவர்களின் இந்த உரையாடலைப் பலமுறை கவனித்த ஒருவர், " இவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் " என்பது விளங்காமல் குழம்பிப் போனார். எப்படியாவது இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில் அவர்களிடமே சென்று கேட்டு விடலாம் என்று முடிவெடுத்தார்.

அந்தப் பேச்சாளர்களிடம் சென்று, "ஒவ்வொரு நிகழ்ச்சியும் முடிந்த பின் அகநானூறா? குறுந்தொகையா? என்று வினவுகிறீர்களே, அதன் பொருள் என்ன? " என்று கேட்டார். அந்தப் பேச்சாளர்களில் ஒருவர், நாங்கள் எதிர்பார்த்ததை விட பணம் அதிகமாக கிடைத்துள்ளதா? குறைவாகக் கிடைத்துள்ளதா? என்பதை அறிந்து கொள்வதற்குத்தான் அப்படிக் கேட்டுக் கொள்வோம் " என்றார்.

'தொகை ' என்ற சொல்லுக்குப் பணம் என்ற பொருளும் உண்டு.

'அகநானூற்றின்' வேறு பெயர் ' நெடுந்தொகை '

அகநானூறா? குறுந்தொகையா? என்ற வினாவுக்கான பொருள் இதுதான். 'நெடுந்தொகை' என்றால் 'எதிர்பார்த்ததைவிட பணம் அதிகமாகக் கிடைத்துள்ளது' என்று பொருளாகும். 'குறுந்தொகை ' என்றால் ' எதிர்பார்த்ததைவிட பணம் குறைவாகக் கிடைத்துள்ளது' என்றுபொருளாகும்" என்று விடையளித்தார்.

நாமும் செந்தமிழைச் செப்பமுறச் சிந்தையில் நிறைத்தால் மதி நுட்பம் நம்மைக் கதியென்று கிடக்கும்.

தமிழைச் சொல்வோம்...! தமிழால் வெல்வோம்...!

# பாவாணரும் அகரமுதலியும்



முனைவர் இரா.கு.ஆல்துரை
மேனாள் பதிப்பாசிரியர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்

பாவாணர்

பாவாணர் இலக்கியம் படைக்கும் திறன் கொண்டவர். பாப்புனையும் ஆற்றலே அவரைப் பாவாணர் என்னும் சிறப்புப் பெயருக்கு உள்ளாக்கி யுள்ளது. பொதுவாக ஓர் இலக்கியப் புலவன் இலக்கியத்தை ஆராய்ந்து அதிலுள்ள நயங்களை விளக்குவான். ஒரு திறனாய்வாளன் இலக்கியம் வெளிப்படுத்தும் மொழி அமைப்பு, பண்பாடு, குமுகாய நிலை போன்றவற்றை ஆராய்வான். ஒப்பிடுவதில் வல்லவராக இருந்தால் ஒரு மொழியின் ஒரு காலக்கட்டத்து இலக்கியத்தை மற்றொரு காலக்கட்டத்து இலக்கியத்தோடு ஒப்பிட்டு விளக்குவார். ஒரே காலக்கட்டத்து இரு இலக்கியங்களைத் தம் ஒப்பீட்டு ஆய்வுக்கு உட்படுத்தி விளக்குவதும் உண்டு. ஓர் இலக்கண அறிஞன் இலக்கணக் கட்டமைப்பினை நுணுகி ஆராய்வான்; இலக்கண நெறி இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள வகைமையை விளக்குவான். இலக்கண நெறிக்குப் புறம்பான வகையில் அமைந்துள்ளவற்றைக் கோடிட்டுக் காட்டுவான். மொழியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை விளக்குவதும் உண்டு. இலக்கணத்தோடு மொழிப் பயன்பாடு இருக்க வேண்டிய தன்மைகளை இலக்கணப் புலவன் வலியுறுத்துவதும் உண்டு. இவை போன்றவற்றில் திறன் கொண்டவர்களாகவே பெரும்பான்மையான இலக்கிய இலக்கணப் புலவர்களை நாம் காண்கிறோம். இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் பலரும் வியந்துபோற்றும் வகையில் பாவாணர் இத்திறன் அனைத்தும் கொண்டிருந்தார் என்பதாகும்..

அகரமுதலி

பாவாணர் தமிழ் இலக்கிய இலக்கணத்தில் ஆழ்ந்த பயிற்சி உடையவர். இலக்கண நூல்களின் மேல் அவருக்கு அளவில்லாத ஈடுபாடு இருந்து வந்துள்ளது. அவரது இலக்கணப் புலமை மொழிநூல் அடிப்படையில் தமிழ் மொழியை ஆராய்வதற்கு உந்து ஆற்றலாய் விளங்கியது. ஆங்கில இலக்கணத்தை அடியொற்றி அதற்கு இணையான வகையில் தமிழில் இலக்கணம் (இயற்றமிழ் இலக்கணம்) இயற்றியுள்ளார் என்பது அவரது ஆங்கில அறிவினைத் தெளிவாகக் காட்டுகிறது. வடமொழி வரலாறு படைத்துள்ளது அவரது வடமொழி அறிவினைக் காட்டுகிறது. இலத்தீனம், கிரேக்கம் போன்ற மேலை ஆரியச் சொற்களையும் தம் சொல்லாராய்ச்சியால் உட்படுத்தி யுள்ளது அவரது பரந்துபட்ட ஒப்பிலக்கணப் புலமையைக் காட்டும். இவை போன்ற பெரும்பரப்பில் தம் அறிவுத் தேடலைத் தடம் பதித்துள்ள ஒரு பேரறிஞர் "அகரமுதலிப் பணிக்காகவே இறைவன் என்னைப் படைத்தான். என் நூல்களுள் தலை சிறந்ததும் வேறொருவராலும் செய்ய முடியாததும், தமிழின் தலைமையை நிலை நாட்டுவதும் அகரமுதலிப் பணி ஒன்றே. என் ஆராய்ச்சியின் முழுவிளையும் அஃதே" என்று குறிப்பிட்டுள்ளது அகரமுதலியையே தம் ஆய்வு நோக்கமாகக் கொண்டிருந்ததைத் தெளிவாக்குகிறது. பாவாணரது உள்ளக்கிடக்கை தமிழ்மொழி முழுவதையும் ஆராயவேண்டும் என்பதாகும். அதற்கு அகரமுதலியே ஏற்றதாக இருக்கும் எனக் கருதினார்.

வகை

அகரமுதலி என்பது சொற்களைப் பற்றிய குறிப்புகளை உள்ளடக்கிய பார்வைப் பொத்தகம். இது தனிப்பட்ட சொற்களின் பொருள்களைக் காட்டும் வகையில் அமைந்திருக்கும். பொருள்களை எடுத்துக்காட்டுகள் தந்து விளக்குவதும் உண்டு. அகரமுதலி, கலைக்களஞ்சியம் ஆகிய இரண்டும் பார்வைப் பொத்தகங்கள்தாம். ஆனால், கலைக்களஞ்சியம் பொருள்கள், மக்கள், இடங்கள், கருத்துகள் போன்றவற்றில் நாம் கொண்டிருக்கும் அறிவைப் பற்றிய விளக்கத்தினைக் கொண்டிருக்கும். அகரமுதலி மொழியின் கருத்து வெளிப்பாட்டிற்குத் தேவையான சில உருப்படிகளை மட்டும் கொண்டிருக்கும். அகரமுதலியை ஒருமொழி அகரமுதலி என்றும் இருமொழி அகரமுதலி என்றும் பன்மொழி அகரமுதலி என்றும் மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். ஒருமொழி அகரமுதலியில் சொற்களுக்கு அம்மொழியில் பொருள் வரையறை, எடுத்துக்காட்டுகள், கூடுதல் செய்திகள் என்று அனைத்தும் ஒரே மொழியில் அமைந்திருக்கும். இருமொழி அகரமுதலியில் ஒரு மொழிச் சொற்களின் பொருள்கள் வேறொருமொழியில் கொடுக்கப்பட்டிருக்கும். இவ்வகை அகரமுதலியில் எடுத்துக்காட்டுகள் அவ்வகரமுதலி கொண்டுள்ள இருமொழிகளிலும் கொடுக்கப்படுவதும் உண்டு. இரண்டு மொழிகளுக்குமேல் சொற்கள், பொருள்கள், எடுத்துக்காட்டுகள் ஆகியன இடம்பெறும் அகரமுதலிகள் பன்மொழி அகரமுதலியின்பாற்படும்.

இம்மூவகை அகரமுதலிகளையும் பொதுவகை, சிறப்புவகை என்று இருவகையாகப் பிரிக்கின்றனர். பொதுவகை அகரமுதலி, அதன் பெயருக்கு ஏற்றாற்போல் ஒன்று அல்லது பல மொழிகளின் பொதுவான தன்மைகளைக் கொண்டிருக்கும். சிறப்புவகை அகரமுதலி ஒரு மொழியின் சிறப்பான ஒரு பிரிவினைப் பற்றியதாக இருக்கும். சிறப்புவகை அகரமுதலி பொதுவாக ஒரு பொருண்மை சார்ந்ததாக இருக்கும். பாவாணர் தொகுக்கத் திட்டமிருந்த அகரமுதலி இருமொழி அகரமுதலி, சொற்பிறப்பியல் என்னும் சிறப்புவகை அகரமுதலி, கலைக்களஞ்சிய அமைப்பையும் உள்ளடக்கியது. ஆகத் தாம் திட்டமிட்டிருந்த அகரமுதலிக்கு அகரமுதலி அறிவு, கலைக்களஞ்சிய உருவாக்க அறிவு, இருமொழிப் புலமை ஆகியவற்றுடன் சொற்பிறப்பு காணும் திறனும் வேண்டும். இத்திறன்கள் அனைத்தையும் ஒருங்கே தாம் பெற்றிருந்ததே இவ்வகை அகரமுதலித் தொகுப்பிற்கு அவர்தம்மை முற்செலுத்தியுள்ளது.

### பன்முகம்

பாவாணர் ஒரு பேரறிஞர். அவர்தம் அறிவு பன்முகப்பட்டது. அவர் இனத்திற்கும் மொழிக்கும் உழைத்த ஒரு பெரும் உழைப்பாளி. பலரும் வறண்ட துறையாகக் கருதிய மொழிநூல் துறையில் ஆர்வத்துடன் ஈடுபட்டுத் தமிழின் வளங்களை வெளிக்காட்டிய ஆய்வாளன். தமிழில் அறிமுகமாகாத சொல்லாய்வுத்துறையை எடுத்துக் கொண்டு அதை ஒரு வளர்துறையாக வளர்த்தெடுத்த முன்னோடி. அவர் பேருக்கும் புகழுக்குமாக உழைத்தவர் அல்லர். தம் உழைப்பால் பொருளீட்டுவதற்கு வழிதேடியவரும் அல்லர். அதே நேரத்தில் தம் ஆய்வுகளை ஒரு பக்கமாகத் திறனாய்வு செய்து பகடி பேசியவர்களைக் கண்டு எள்ளவும் தம் முயற்சியில் பின் வாங்கியவர் அல்லர். அவர் கருத்துகளைப் படிக்காமலேயே அவர் ஆய்வினைக் கிண்டல் செய்தவர் பலர். அவர் வடமொழிப் பிடிப்பினின்று தமிழை விடுவிக்க மேற்கொண்ட முயற்சியால் ஏற்பட்ட வடமொழிச் சார்பாளர் எதிர்ப்புக்கும் அஞ்சியவர் அல்லர். அவரது விருப்பம் தமிழ்ச் சொற்கள் அனைத்தும் இயன்மொழிச் சொற்களாய்த் தமிழினத்திற்கு அணியாக வேண்டும் என்பதே. அவ்வகையில் தமிழில் புகுந்த அயன்மொழிச் சொற்களை நீக்கித் தமிழ்ச் சொற்கள் வழக்குபெற வழிகாட்டியவர். அயன்மொழிச் சொற்கள் பலவற்றிற்குத் தமிழ்ச் சொற்கள் உருவாக்கிய சொற்படைப்பாளி. எல்லாவற்றிற்கும் மேலாக எவ்வகை ஆய்வும் இல்லாமல் வெறுமனே பலவற்றை அயன்மொழிச் சொற்கள் எனக் கருதியவற்றின் தமிழ்த் தன்மைகளைக் காட்டி அவற்றிற்கு உயிர்ப்பு கொடுத்தவர்.

### அயன்மொழிச்சொல்

ஆங்கிலம் பிறமொழிச் சொற்களைக் கடன்கொண்டு தன்னை வளப்படுத்திக் கொண்டது போல் பிறமொழிச் சொற்களைக் கடன் கொண்டு தமிழை வளப்படுத்திக் கொள்ளலாம் என்று கூறுவோரும் உண்டு. உண்மையில், இவ்வாறு கூறுவோர் மொழியின் இயல்பை அறியாதார் என்றுதான் கூற வேண்டும். இவர்கள் உலகில் உள்ள எம்மொழியும் பிறமொழிச் சொல் கடன் வாங்காமல் இல்லை என்பதனைத் தம் கருத்துக்கு அரணாகப் பேசுவர். ஆனால் ஆங்கிலம் பிறமொழிச் சொற்களைக் கடன் கொண்டமைக்கு அம்மொழியில் புதுவதாக வரும் கருத்துக்கும் பொருளுக்கும் புதுச்சொற்கள் படைக்கும் முயற்சியில் ஈடுபடாதது அம்மொழியாளர் சோம்பேறித்தனமும் ஒரு காரணம் என்று குறிப்பிடுவதை (Earnest Weekly 1967:12) அறியார் போலும். எவ்வாறாயினும் "ஆங்கிலச் சொற்கள் நல்ல எளிமைத்தனத்துடன் இருக்கும் பிரஞ்சுச் சொற்களைப்போல் இல்லாமல் ஓரளவிற்குத் தெளிவற்ற தன்மையில் இருக்கின்றன" (மேலது 13) என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். சொல் தெளிவுடன் துல்லியமாகப் பொருளுணர்த்த வேண்டுமெனில் அது இயன்மொழிச் சொல்லாய் இருக்க வேண்டும் என்பதில் இருவேறு கருத்துக்கு இடமில்லை.

பலர் அயன்மொழிச் சொற்களைக் கற்பது கடினம் எனக் கொண்டுள்ளனர். உண்மையில் அயன்மொழிச் சொற்களைக் கற்பது எளிது. அயன்மொழி இலக்கணத்தைக் கற்பதுதான் கடினம் (Gleason 1974:7). அவ்வகையில் சிலபல அயன்மொழிச் சொற்களை வலிய முயன்று பயன்படுத்தித் தாம் அம்மொழி அறிவுபெற்றுள்ளோம் எனக் காட்ட நினைக்கின்றனர். இவ்வாறு செயல்படுவதால் அவர்கள் நினைக்கும் மொழிஅறிவும் வராது. தம் மொழி அறிவும் குறைபட்டுப்போகும்.

எந்த ஒரு மொழியிலும் பிறமொழிச் சொற்கள் மிகையாக இருப்பதற்கு உரிய சொற்களை உருவாக்குவதில் அம்மொழியாளர் கவனம் செலுத்தாத சோம்பேறித்தன்மை ஒரு காரணம். தமிழைப் போன்ற நீண்ட வரலாறும் சொல்வளமும் பொருள்வளமும் கொண்ட மொழியில் பிறமொழிச் சொற்களுக்குரிய சொற்களை உருவாக்கப் பெருமுயற்சி தேவை இல்லை.

### தனித்தன்மை

ஒரு மொழியின் வரலாறு பெருமளவில் அம்மொழியைப் பேசுபவர்களைக் காட்டுவதாக இருக்கும். மேலோட்டமாகத் தமிழைப் பார்ப்பவர்கள் கூட அதன் தனித்தன்மைகளை உணர்ந்துகொள்வர். இந்தத் தனித்தன்மைகளை இம்மொழி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகக் கொண்டுள்ளது என்பது இதன் சிறப்பாகும். தமிழ் இரண்டாயிரம்

ஆண்டுகளுக்குமுன் சற்றொப்ப முழுவதுமாகப் பிறமொழிக் கலப்பு எதுவும் இல்லாமல் இருந்துள்ளது. கழக இலக்கியக் காலத்திற்குப்பின் பிறமொழிக் கலப்பு மெல்ல மெல்ல தமிழில் ஏற்பட்டுள்ளது. இதில் பெரும்பான்மை வடமொழிச்சொல் கலப்பு. என்றாலும் இந்தக் கலப்பு எளிமையாக நீக்கும் அளவிலேயே இருந்துள்ளது. அதாவது, பெரும்பான்மை ஏற்கெனவே தமிழில் உள்ள கருத்துகளுக்கும் பொருள்களுக்குமான சொற்களாகவே வடமொழிக் கலப்புச் சொற்கள் இருந்துள்ளன. தமிழில் இல்லாத பொருள், கருத்து ஆகியவற்றிற்கென்று வழங்கப்பட்ட வடமொழிச் சொற்கள் குறைவு. அச் சொற்களுக்கும் உரிய வகையில் சொல்லாக்கம் பெறும் தகுதியினைத் தமிழ் என்றும் கொண்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

### ஒருபொருட் பன்மொழி

தமிழ் காலத்திற்கு ஏற்றாற்போல் தன்னை அணியப்படுத்திக்கொண்டு வந்துள்ளது. இத் தன்மைகளுள் குறிப்பிடத்தக்கது தேவையில்லாமல் மிகையாக இருப்பதை நீக்கிக் கொள்வதாகும். தமிழில் ஒருபொருட் பன்மொழிகள் பல உள்ளன. இதற்கு அடிப்படைக் காரணம் தமிழ் பெரும் பரப்பில் பேசப்பட்டு வந்துள்ளதால் அமைந்த கிளைவழக்குகள் ஆகும். கிளைவழக்குகளில் தோன்றிய சொற்கள் பல ஒருபொருட் பன்மொழிகளாகத் தோன்றியுள்ளன. இரண்டாவதாகத் தமிழ் நீண்டகாலமாக எழுத்துமொழியாக இருந்துள்ளது. ஆக, அவ்வக்காலத்தில் தோன்றிய சொற்களுள் பெரும்பான்மையானவை மொழியில் வழக்கிழக்காமல் இருக்கின்றன. அவ்வகையில் ஒருபொருள் பன்மொழிகள் பல உருவாகியுள்ளன. பொதுவாக ஒருபொருள் பன்மொழிகளுக்குள் நுண்ணிய வேறுபாடு இருக்கும். ஒருபொருள் பன்மொழிகள் மொழியின் வளத்தைக் காட்டுவன. இவையல்லாமல் அயன்மொழிச் சொற்கள் பல ஒருபொருட் பன்மொழிகள் என்னும் வகையில் வழக்கில் இருக்கின்றன. மிகையானவையாக இருக்கும் இவ்வகைச் சொற்களை நீக்கித் தமிழின் தனித் தன்மையைக் காட்டுவதற்குப் பெருமுயற்சி எதுவும் தேவை இல்லை.

### அகரமுதலித்திறன்

பாவாணர் திட்டமிட்டிருந்த செந்தமிழ்ச் சொற்பிறப்பு அகரமுதலி முடியும் வரை இருந்து அம் மாபெரும் பணியை முடித்திருந்தால் அவர் நினைத்திருந்தவாறு தமிழ்ச்சொற்கள் அனைத் திற்கும் விளக்கம் கிடைத்திருக்கும். அந்த அகரமுதலியின் மதிப்பு பன்மடங்கு கூடியிருக்கும். ஒவ்வொரு சொல்லுக்கும் நல்ல பொருள் வரையறை, ஏரண அடிப்படையில் பொருள்வளர்ச்சி காட்டல், வேர்விளக்கம், இனச்சொல் போன்றன கிடைத்திருக்கும். என்றாலும் அவரது நூல்களிலும் கட்டுரைகளிலும் பெருமளவில் இவை இடம்பெற்றுள்ளன. அந்த வகையில் ஓரளவிற்கு அமைதிபெறலாம். பாவாணர்தம் சொற்பிறப்புத் திறனே மக்களிடம் பரவலாகப் பரவியுள்ளது. அதே நேரத்தில் அவரது அகரமுதலித் திறன் குறிப்பாகச் சொல்வரையறைத் திறன் பிறவற்றைக் காட்டிலும் விஞ்சி நிற்கிறது என்று குறிப்பிட வேண்டும்.

### பொருள்வரையறைத் திறன்

எ–டு: சாரியை: தாமாகச் சாராத இரு சொற்களை அல்லது சொல் உறுப்புகளைச் சார்ந்தவற்றை இசைக்கும் அசை. சார்ந்து இயைப்பது சாரியை (இயைத்தல்= இசைத்தல்) (பாவாணர் 2000:61)

மொழி: மக்கள் தம் கருத்தைப் பிறர்க்கு அறிவித்தற்குக் கருவியாகும் ஒலிக்கூட்டம் (மேலது:1)

எழுத்து: ஒரு சொல்லுக்குக் கருவியாகும் ஒலி. (கருவி எனினும் காரணம் எனினும் ஒன்றே) (மேலது:1) ஒலிவடிவாயுள்ள எழுத்து வரிவடிவாய் எழுதப்படுதலின் எழுத்தெனப்பட்டது. எழுத்துக்கு இரண்டு வடிவங்கள் உண்டாம். அவற்றுள் ஒலியே எழுத்து. அதை அறிவிக்கும் குறியே வரி. ஆயினும் இவ்விரண்டிற்குமுள்ள இயைபு பற்றி இரண்டும் எழுத்தெனப்பட்டது (மேலது:1)

முதலெழுத்து: முதலாவதுண்டான எழுத்துகள் (மேலது:2)

சார்பெழுத்து: முதலெழுத்தைச் சார்ந்து வரும் எழுத்துகள் (மேலது:2)

உயிரெழுத்து: இவை உயிர் போன்றமையின் உயிரெனப்பட்டன. உயிரானது தானே அசையும்; ஓர் உடம்பையும் அசைவிக்கும். அதுபோல உயிரெழுத்துதானே ஒலிக்கும்; ஒரு மெய்யெழுத்தையும் ஒலிப்பிக்கும் (மேலது:2)

ஒரு சொல்லுக்கு அது கொண்டிருக்கும் தன்மை அதன் பயன்பாடு போன்றன அடிப்படையில் பல வகையில் பொருள் வரையறை தர இயலும். என்றாலும் பொதுவாக எல்லோருக்கும் ஏற்புடைத்தான வகையில் பொருள் வரையறை தருவது மிகக் கடினம். அதனால்தான் சொற்களை உருபன் சொற்கள் (morphology words), சொல்லியல் சொற்கள் (lexical words), பொருளனியல் சொற்கள் (semantic word) என்று மூன்றுவகையாகப் பிரித்து அதற்கேற்ப பொருள்வரையறை தருகின்றனர் (Sydney M.Lamb 1970:45). எவ்வாறாயினும் பாவாணர்தம் சொல்வரையறைத் திறன் சிறந்திருப்பதைப் பரவலாக அவர்தம் படைப்புகள் அனைத்திலும் காணலாம்.

### சொற்பொருள்

அகரமுதலிப் பயன்பாட்டில் முதன்மையாக அமைவது சொற்பொருளே. சொற்பொருள் உரியதாக அமைய வேண்டும். குன்றக்கூறல், அல்லது மிகையாகக் கூறல் இருக்கலாகாது. வரையறையைப் பார்த்த மட்டில் சொல்லை முழுமையாக உணர்ந்து

கொள்ளவேண்டும். அவ்வகையில் சொற்பொருள் முழுமையாகவும் தெளிவாகவும் மயக்கமற்ற நிலையில் அமைய வேண்டும். பாவாணரின் பொருள் வரையறைத்திறன் போற்றிப் பாராட்டற்குரியது.

எ-டு: அவரை: பெரும்பான்மை வெளிறின பசுமை நிறமாகவும் சிறுபான்மை வெண்மை செம்மை நிறமாகவும், பல்வேறு வடிவிலும் இருவிரலம் (inch) முதல் எண்விரலம் வரை பல்வேறு அளவில் இருப்பதும், பொதுவாக வீட்டுப்புறங்களில் விளைவிக்கப்படுவதும், இவர்கொடியிலேனும் (climber) சிறுபான்மை குத்துச் செடியிலேனும் (shrub) மாரிக் காலத்திற் காய்ப்பதும், உடல் நலத்திற் கேற்றதும் சுவையுள்ளதும் எல்லோராலும் விரும்பப்படுவதுமான கறிவகைக் காய்.

சொல்லும் அது உணர்த்தும் பொருளும் மொழி அமைப்பில் அடிப்படையானவை. சொல், பொருள் ஆகியன தொடர்பாகக் கவனிக்க வேண்டிய கூறுகள் சில உள்ளன. 1. ஒரு சொல் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைக் கொண்டிருக்கலாம், 2. வெவ்வேறு சொற்கள் ஒரு பொருளை உணர்த்துவனவாக இருக்கலாம், 3. சில சொற்களின் பொருள்கள் பகுத்துப் பார்ப்பதற்கு இடம் தருகின்றன, 4. சில சொல் இணைவுகள் அச்சொற்கள் சேர்க்கையைக் காட்டிலும் வேறான பொருளைத் தரலாம், 5. சில சொல் இணைவுகள் எதிர்ப்பொருள் தருவனவாக இருக்கலாம், 6. சில பொருள்கள் வேறு பொருள்களுடன் இணைந்து காணப்படுகின்றன (Sydney M.Lamb 1970:45) இவை அனைத்திலும் பாவாணர்தம் கவனம் சென்றுள்ளமையை அவர்தம் படைப்புகள் தெற்றெனக் காட்டுகின்றன.

### கலைக்களஞ்சியம்

அகரமுதலியில் இடம்பெற வேண்டிய கலைக்களஞ்சியக் கூறுகளுக்குத் (சொல்லோடு தொடர்புடைய செய்திகளுக்கு)ச் சிறப்புக்கவனம் செலுத்தி வந்துள்ளார்.

எ-டு: அடியார்க்கு நல்லார் : [சிலப்பதிகாரத்திற்குச் சிறந்த விரிவுரை வரைந்த 12ஆம் நூற்றாண்டு உரையாசிரியர்] அடியார்க்கு நல்லார் என்பது, அடியார்க்கன்பன் (பக்தவத்ஸல) என்பது போன்ற இறைவன் பெயர். இறைவன் பெயரை மக்கட்கு இயற்பெயராக இடுவது தொன்று தொட்ட தமிழர் வழக்கம். நல்லார் என்பது நல்லான் என்பதன் உயர்வுப் பன்மை.

சொற்பொருள் வரையறைத் திறனில் பாவாணருக்கு நிகர் பாவாணர்தான். அதுபோல் கலைக்களஞ்சிய (சொல்லோடு தொடர்புடைய) ச்செய்திகளை உரிய வகையில் தருவதிலும் அவருக்கு நிகர் அவர் தான்.

### படைப்பு

மொழி மாந்தனால் உருவாக்கப்பட்டது. பார்வை, செய்கை ஆகியவற்றின் மூலம் எண்ணத்தினைப் பிறருடன் பகிர்ந்துகொள்வதற்கு இயலாத நிலையில் மாந்தன் மொழியைக் கண்டு பிடித்தான். அது அடுத்தடுத்து வந்த தலைமுறையினரின் கூட்டு முயற்சியினால் முழுமையாக்கப்பட்டது (MaxMuller 1965:30) மொழியின் தோற்றம் எவ்வாறாக இருந்தாலும் கலை, சட்டம், சமயம் போன்ற பிற துறைகளைப் போன்று தனக்கென்று தனியான வரலாற்றினைக் கொண்டுள்ளது என்பது வெளிப்படையான உண்மை (மேலது.33). சொல்லின் தோற்றம் வேரிலிருந்து தொடங்குகிறது. வேருடன் ஒட்டுகள் சேரும்போது வேர் மாற்றம் அடைவது உண்டு. பெரும்பாலும் ஒரு மொழியின் வேர்கள் வடிவத்தில் சீரானவையாக இருக்கும். பெரும்பாலான மொழிகளில் வேர்கள் உருபன்களாக இருக்கின்றன. பாவாணர் வேரிலிருந்து சொல் கொண்டுள்ள பொருள் வளர்ச்சியைக் காட்டுவதற்கு முயன்றுள்ள மையால் அவர்தம் வரையறைகள் இயல்பாகச் சொல் பெற்ற வளர்ச்சியுடன் பொருந்திக் காணப்படுகின்றன. பாவாணர் காட்டிய வேர்கள் மொழித் தோன்றிய காலத்திலிருந்து வளர்ந்து வந்துள்ள தன்மையைக் காட்டுபவை.

புதிய சொற்களையும் புதிய இலக்கணக் கூறுகளையும் உருவாக்குபவர் ஒரு தனிப்பட்ட தனியாளாகத்தான் இருக்க வேண்டும். என்றாலும் அவரது தனியாள் தன்மை தான் சார்ந்த குடும்பம், இனம், நாடு போன்றவற்றின் குழுவுடன் இணைந்து விடுகிறது: பொதுச் செயல்பாட்டோடு இணைந்து விடுகிறது. அதன்பின் அவரால் ஒன்றும் செய்ய இயலாது. முழுமையாக இல்லை என்றாலும் பெரும்பான்மை, முதன் முதலில் புதியன உருவாக்குவது தனியாளாக இருந்தாலும் அது முன்கூட்டியே கருதியதாகவும் இல்லை. உருவாக்க வேண்டும் என்னும் முயற்சியில் உருவானதாகவும் இல்லை (மேலது.41).

மொழி மாந்தனோடு இருக்கிறது. அது பேசப்படுவதால் வாழ்கிறது. அது பேசும் சொற்களைக் கேட்போர் இல்லாத நிலையில் ஒவ்வொரு சொல்லுடனும் இறக்கிறது (மேலது.49). ஆகத் தமிழ் போன்ற வளமையான மொழி அதன் அனைத்துத் தன்மைகளுடன் பயன்பாட்டில் இருக்க வேண்டியது கட்டாயத் தேவை. இதனை நன்கு உணர்ந்த தனாலேயே பாவாணர் பேச்சிலும் எழுத்திலும் தமிழைப் பயன்பத்துவதற்கு முன்னுரிமை அளித்தார். அவ்வகையிலேயே அனைவரும் செயல்பட வேண்டும் என்னும் நோக்கத்தில் தாமே செயல்படுத்திக் காட்டினார்.

பேச்சுமொழிச் சொற்களுக்கும் எழுத்துமொழிச் சொற்களுக்கும் இடையே மாற்றம் உண்டு. நீண்டகாலமாக நன்கு நிலைப்பட்டிருப்பதால் எழுத்துமொழியில் பேச்சுமொழியைக் காட்டிலும் அதிகமான சொற்கள் இருக்கும் என்று கருதத்தோன்றும். இது உண்மையன்று (Gleason

1974:435). அதேபோல் பேச்சில் கொச்சை இருந்தாலும் தாழ்வில்லை என்று பலரும் கருதுகின்றனர். இவை போன்றவற்றிலும் பாவாணர் தெளிவுடன் இருந்துள்ளார் என்பது கவனிக்கத்தக்கது. ஆகையால், பேச்சிலும் செம்மையாக மொழியைப் பயன்படுத்த வேண்டும் என்னும் கருத்துடன் இருந்ததோடு அதன் செயல்பாட்டிலும் பாவாணர் தம் இறுதிக் காலம் வரையிலும் இருந்துள்ளார். இதன்மூலம் பேச்சில் தனித்தமிழ், மொழிச்செம்மை ஆகியன கொள்ள நடைமுறை இடந்தராது எனக்கூறும் கூற்றினை முழுவதுமாகப் பொய்யாக்கியுள்ளார். இதே அளவுகோலை அகரமுதலிக்கும் பயன்படுத்தினார். பேச்சில் இருக்கிறது என்னும் சாக்கில் அகரமுதலியில் கொச்சை வடிவத்தை இடம்பெறச்செய்வதற்குப் பாவாணர் இடம் தரவில்லை. கொச்சை வடிவங்களின் செம்மை வடிவங்களை ஆய்ந்தெடுத்து அவற்றை அகரமுதலியில் இடம்பெற வழிவகை காட்டினார்.

## அகரமுதலிக் கலை

அகரமுதலிக்கலை, மொழியியல் ஆகிய இரண்டும் மொழியைப் பற்றி ஆராய்கின்றன. ஆனால் இவற்றின் நோக்கங்களும் பகுப்பாய்வு வகைகளும் மாறுபடுகின்றன. இவற்றிற்கிடையே வேறுபாடு இருந்தாலும் சில வகையில் இவை ஒன்றோடொன்று இணைந்து செல்லும் தன்மையினவாக இருக்கின்றன. மொழியியல் மொழியின் கட்டமைப்பை விளக்கும் வகையினவான நெறிகளைக் கொண்டது. அகரமுதலி மொழியின் அடிப்படை அலகுகளாக விளங்கும் சொற்களைப் பற்றி விளக்கும் வகைமையைக் கொண்டது. எவ்வாறு இருந்தாலும் அகரமுதலிக்கு மொழியியல் அறிவு அடிப்படையாக அமைகிறது. அவ்வகையில் பாவாணரின் அகரமுதலிக்கலைத் தேர்ச்சிக்கு அவரது இலக்கணப் புலமையுடன் கூடிய மொழியியல் அறிவு பெருமளவில் துணை புரிந்துள்ளது. அவரது மொழியியல் பங்களிப்பைக் காண்பது அவரது அகரமுதலிக் கலைத் தேர்ச்சியைக் காட்டுவதாக இருக்கும்.

மொழிவளர்ச்சியில் அகரமுதலியின் பங்கு குறிப்பிடத்தக்கது. ஒரு மொழியின் எல்லாச் சொற்களை அல்லது பெரும்பாற் சொற்களை வண்ணமாலை வரிசையில் தருவது அகரமுதலி. "ஒரு மொழியின் வளம் அல்லது வலிமை அதன் சொற்களாயது" (பாவாணர்) ஆக மொழிச் சொற்களை அலகுகளாகக் கொண்ட அகரமுதலி மொழி வளத்தை அல்லது மொழியின் வலிமையை முழுமையாகக் காட்டவல்லது. அதனால்தான் தமிழ் மொழியின் வளங்கள் அனைத்தையும் காட்டுவதற்கு அகரமுதலியே உகந்தது எனக் கொண்டார் பாவாணர்.

அகரமுதலிப் பணியாளர்க்கு வேண்டிய இலக்கணவறிவு, சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, சொற்றொகுப்பு ஆகிய நாற்பெரும் திறன்களுடன் அகரமுதலிப் பணியைத் தொடர்ந்தார் அவர்.

அகரமுதலி சொற்களைப் பற்றியது. அது மொழியின் அனைத்துச் சொற்களை அல்லது ஒருபகுதிச் சொற்களைக் கொண்டதாக இருக்கலாம். கேட்கும்போது அல்லது படிக்கும்போது புரியாத சொற்களைப் பார்ப்பதற்கு, ஓரளவு அறிந்துள்ள சொற்களின் பொருள்களை உறுதிப்படுத்துவதற்கு, சொல் அமையும் சூழலில் உருவாகும் உன்னிப்புப் பொருள்களை உறுதிப்படுத்துவதற்கு, இதுவரை பழக்கப்படாத சொற்களைப் அறிந்துகொள்வதற்கு, தெரியாத சொற்களைப் பார்ப்பதற்கு, ஒரு சொல் உண்மையில் இருக்கிறதா என்று அறிந்துகொள்வதற்கு, அறிந்த சொற்களுக்கு மாற்றாகப் பயன்படுத்தக்கூடிய வேறு சொற்களை அறிந்துகொள்வதற்கு,சொற்களைப்பிழையில்லாமல் பயன்படுத்துவதற்கு என்று அகரமுதலியின் பயன்பாட்டைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர். இப்பயன்கள் அனைத்தையும் அளிக்கும் வகையில் தாம் திட்டமிட்டிருந்த அகரமுதலி அமையவேண்டும் என்று விரும்பினார் பாவாணர். அதற்கேற்ப அகரமுதலியில் சொற்கள், அவற்றின் இலக்கண வகைமை, பொருள்வரையறை, ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்கள் இருப்பின் அவற்றில் ஒழுங்கு, மேற்கோள்கள், எடுத்துக்காட்டுகள், ஒரு பொருள் பன்மொழிகள், இனச்சொற்கள், கலைக்களஞ்சியச் செய்திகள், வேர்விளக்கம் என்பன போன்ற அகரமுதலிக் கூறுகள் அனைத்தும் இடம்பெறும் வகையில் திட்டமிட்டிருந்தார்.

## குறிப்புதவி நூல்கள்


1. பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்) 2000, இயற்றமிழ் இலக்கணம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை, (முதற்பதிப்பு 1940).

2. Bloomfield, Leonard, 1996, Language, Motilal Banarsidas, Delhi (first published 1935).

3. Earnest Weekly, 1967 The English Language, Rupa & Co., Calcutta.

4. Gleason, H.A., 1974, An Introduction To Descriptive Linguistics, Oxford & IBH Publishing House, New Delhi.

5. Max Muller, F., 1965 Lectures on the Science of Language, Munshi Ram Manohar Lal, Delhi, (first published 1861).

6. Sydney M.Lamb 1970, Lexicology and Semantics, (Linguistics Ed. Archibald H.Hill), Higginbothems (P) Ltd., Madras –2

# புரி எனும் விருப்பும் விடு எனும் பிளவும்



இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா

உல் > துளைத்தல் கருத்து வேர்.
உல்> புல்> புள்> பிள் > பிள> பிளவு
பிள்> விள்> விடு

துளைக்கப்பட்டது பிளக்கும். பிளக்கப்பட்டது விலகும். விலகியது தனித்துச் செல்லும். அது விடுவிக்கப்பட்டதாகும்.

விடுவிக்கப்பட்டதே... விடுதலை. பிணைக்கப்படாமல் கட்டுறாமல் இயல்பாய் இயங்கலும் விடுதலையே. ஆங்கிலத்தில் " Free" என்பதற்கு விலையில்லாமல் வழங்குவது எனும் பொருள். அதே வேளை எந்தக் கட்டுக்குள்ளும் இல்லாமல் இருப்பதையும் இவ்வாறு அழைப்பர். சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டவரையும் free ஃபிரி என்பர். இஃது அனைவராலும் அறியப்பட்டதே. ஆனால் ஆங்கில வேர் மூலம் பிளத்தல் பொருளில் அமையாமல் விருப்பப் பொருளில் அமைந்ததாகும்.

அதற்கும் தமிழின் புல், விள் எனும் விருப்பப் பொருள் வேர்கள் தொடர்புடையனவாக உள்ளதை அறிய முடிகின்றது.

நெருங்கல், சேர்தல், பற்றுதல் பொருளில் உல்> புல்> புள்> பிள்> விள் எனச் சொல்லமையும். இந்தோ ஐரோப்பிய மொழிகளில் will என இவ்வேர் வழங்குவதைக் காணலாம்.

புல்லும் விள்ளும் உல்லின் பிறப்புகளே.

இவ்வேர் வளர்ச்சி இதே கருத்தடிப்படையில் பல்வேறு சொற்களுக்கு மூலமாய் அமைவதை ஆய்வின் வழி அறியலாம்.

உல்> புல் > புர்> புரி = விருப்பம்.

புரி > புரியம் = விருப்பம்.

இப்புரி, விருப்பம் எனும் பொருளில் இலக்கியங்களில் பல்லிடங்களில் ஆளப்பட்டுள்ளன.

புரி = விரும்புகின்ற : "புரிமட மரையான் கருநரை நல்லேறு" ( குறு: 317)

புரி = விருப்பம் : "ஒரு நன்று உடையள் ஆயினும் புரி மாண்டு புலவி தீர அளிமதி" (குறு : 115:2–3)

புரித்த = விரும்பத் தக்க: "கருப்புச் சாற்றோடு கலந்து கை செய்து புரித்த தெங்கு இளநீரும் பூரிப்பார்" (சீவ: 12:25).

புரிந்தருளி = விரும்பி: "தவத்தது பெருமையில் தங்கின இவற்கு என மருட்கை உற்ற தன் மனம் புரிந்தருளி" (பெருங்: 32:11).

புரிந்தனர் = விரும்பினர்: "தூங்குதல் புரிந்தனர் நமர் என ஆங்கு அவற்கு" (அக:382:7).

புரிந்து = விரும்பி: "நன்று புரிந்து எண்ணிய மனத்தை ஆகி" (குறு: 400:3).

புரி நிறம் = விரும்பப்படுகின்ற அழகு: "புரி நிற நீள் பொன் அணிந்த கோங்கம் புணர் முலையாய்" ( தி.நூ: 63–2).

புரிபு = விரும்பி: "புரிபு நீ புறம் மாறிப் போக்கு எண்ணிப் புதிது ஈண்டி" (கலி:15:10).

புரி மலர் = விரும்புதற்குரிய அழகு: "புரி மலர்த் தண் வரை அகலம் புணராதார் புண்ணியங்கள் புணராதாரே" (சூளா:1813).

புரியவர் = விரும்புதலையுடையவர்: "புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே" (சம்:3:19:8).

புரிவினர் = விருப்பம் உடையவர்: "புனமுடை நறுமலர் பல கொடு தொழுவது ஓர் புரிவினர்" (சம்:3:86:2).

புரிவு = விரும்புதல்: "பொய் வல் உள்ளமொடு புரிவு உணக் கூறித் துணிவு இல் கொள்கையர் ஆகி" (அக:205:4)

புரிவுண்ட = விரும்பி வந்த: "பொருள் புரிவுண்ட மருளி நெஞ்சே" (அக:361:9).

பாவாணர் பொருந்தற் கருத்தினின்று மனம் பொருந்துதலாகிய விரும்பல் கருத்து தோன்றும் என்றும் அதன் வாயிலாகவே புரி என்பது தோன்றிற்று எனத் தெள்ளிதின் விளக்குவார்.

புல்லுதல் = நட்புச் செய்தல்.

புல்– புல்கு. புல்குதல் = நண்பராய் மருவுதல்.

புல்– புர்– புரி. புரிதல் = விரும்புதல்.

"புகுமுகம் புரிதல்" (தொல்.மெய்ப்.13)

புரித்தல் (பி.வி.) = விரும்பச் செய்தல்.

"புரித்த தெங்கிள நீரும்" (சீவக. 2402)

புரி –வ. ப்ரீ –ப்ரிய, ப்ரீதி, ப்ரேம (முதலியன).

புரி – பரி. பரிதல் = 1. பற்றுவைத்தல். "பண்டம் பகர்வான் பரியான்" (பு. வெ. 12, ஒழிபு. 2). 2. சார்பாகப் பேசுதல். அவனுக்காகப் பரிய வேண்டா (உ.வ.). 3. காதல் கொள்ளுதல். "பாண பரிந்துரைக்க வேண்டுமோ" (ஐந். ஐம். 23). 4. இரங்குதல்."பாழாய்ப் பரிய விளிவது கொல்" (பு. வெ. 3:8).5.வருந்துதல்."பழவினைப் பயனீ பரியல்"(மணிமே. 1250). 6. வருந்திக் காத்தல். "பரியினு மாகாவாம் பாலல்ல" (குறள் . 376). 7. அஞ்சுதல். "வடுப்பரியு நாணுடையான்" (5. 502). என்பது பாவாணர் விளக்கம்.

Free, Friend எனும் இரு சொற்களுக்கும் விருப்பு , நேயம், அன்பு எனும் பொருள் அடிப்படையிலேயே வேர்ச்சொல் விளக்கம் தரப்பட்டுள்ளது. இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பங்களோடு சங்கதம் எனும் சமற்கிருதம் தொடர்புடையதாகையால் சிலர் அதன் ப்ரீ எனும் வேரையே மூலமாகக் கண்டு மயங்குவர். ஆனால் தமிழின் புல் > புர்> புரி என்பதே சங்கதத்திற்கும் இந்தோ ஐரோப்பிய மொழிகட்கும் மூலம் என்பதைக் காய்தல் உவத்தல் இன்றி ஆராய்வார்க்கே புலப்படுவதாகும்.

free (adj.)
Old English freo "exempt from; not in bondage, acting of one's own will," also "noble; joyful," from Proto–Germanic *friaz "beloved; not in bondage" (source also of Old Frisian fri, Old Saxon vri, Old High German vri, German frei, Dutch vrij, Gothic freis "free"), from PIE *priy–a–"dear, beloved," from root *pri– "to love."
The sense evolution from "to love" to "free" is perhaps from the terms "beloved" or "friend" being applied to the free members of one's clan (as opposed to slaves; compare Latin liberi, meaning both "free persons" and "children of a family"). For the older sense in Germanic, compare Gothic frijon "to love;" Old English freod "affection, friendship, peace," friga "love," friðu "peace;" Old Norse friðr "peace, personal security; love, friendship," German Friede"peace;" Old English freo "wife;" Old Norse Frigg, name of the wife of Odin, literally "beloved" or "loving;" Middle Low German vrien"to take to wife," Dutch vrijen, German freien"to woo."

இதன் வழி தமிழின் விடுகை ஆங்கில ஃபிரியோடு வேர் தொடர்புடையதன்று என்பது தெள்ளிதின் புலப்படும்.

விடு துளைத்தல் வழிப் பிளத்தலால் ஆனதாகும்.

விடு எனும் அடியினின்று பல்வேறு சொற்கள் பிறந்துள்ளன. அவற்றுள் சிலவற்றை இங்குக் காணலாம்.

விடுதல் = 1. நீங்குதல்; 2. விலக்குதல்; 3. நீக்குதல்; 4. பிரித்தல் 5. கைவிடுதல்; 6. போக விடுதல்; 7. அனுப்புதல் 8. தொடர்பு விடுத்தல்; 9.நிறுத்துதல் ; 10. ஒழித்து விடுதல்; 11. முடித்தல்; 12.வெளிவிடுதல்
13. செலுத்துதல் 14. எறிதல் 15. சொரிதல்
16. கொடுத்தல்; 17. சொல்லுதல்;
18. விளக்கமாகக் கூறுதல்; 19. வெளிப்படக் கூறுதல் ; 20. ஒப்புதல் தருதல் ; 21. காட்டித் தருதல் 22. வெளிப்படுத்துதல்; 23. புதிர் விடுவித்தல் ; 24. உண்டாக்குதல்; 25. பிடி நெகிழச் செய்தல்; 26. இடத்தினின்று நீங்குதல்; 27. விடுதலை செய்தல்;
28. விடுமுறையளித்தல்; 29. இசைதல்;
30. பிறருக்காக இழத்தல்; 31. ஏவுதல்
32. அடித்தல் ; 33. வினைக்கமர்த்தல்;
34. அமைத்தல்; 35. ஒளிவீசுதல்;
36. புகுத்துதல்; 37. இடையில் ஏடு தள்ளுதல்
38. இடையில் இடம் விடுதல்;
39. பொறுத்தல்; 40. ஒழித்தல் 41. ஒதுக்குதல்
42. பிரிதல்; 42.விள்ளுதல், திறத்தல்;
43.கட்டு அவிழ்தல் 44. மலர்தல் .
45. உண்டாகுதல்; 46. மிகுதல்; 47. தங்குதல்
48. தவிர்தல்; 49.பிளந்திருத்தல் ;
50. நிறுத்தல் ; 51. இடைவெளி விடுதல்;
52. படிக்கையில் நிறுத்துதல்;
53. வலுக்குறைதல் 54. விலகுதல்;
55. அறுபடுதல்

விடுப்பு = 1. நீக்கம்; 2. துருவியறியுந் தன்மை; 3.புதுமையானது; 4.விருப்பம்; 5. தானாக எடுக்கும் விடுப்பு

இங்கு விடுப்பு விருப்பம் எனும் பொருள் தருவது.
விள் எனும் வேரினின்று பிறந்ததால் ஆகலாம்.

உல்> புல் = நெருங்கல், சேர்தல் , பற்றல்
உல் > புல் > பில்> பிள்> விள் = பற்றலால் ஆன விருப்பம்.

விள்> விடு > விடுப்பு = விருப்பம்

விடு எனும் அடியில் பல்வகைப் பின்னொட்டுகள் சேர்கையில் வழக்குப் பொருள்களையும் புதுவல் பொருள்களையும் வழங்கி அச்சொல் தமிழுக்கு மேலும் வளம் சேர்க்கும்.

விடுதல், விடுதலை , விடுதி, விடுகை, விடுப்பு, விடுமுறை, விடுக்கை, விடுவிப்பு, விடுத்தல் இவை நடப்புச் சொற்களே.

விடுப்பி, விடுமி, விடுத்தை, விடுத்தி, விடுப்பம், விடுக்கி, விடுச்சி, விடுசி, விடுகி, விடுப்பான், விடுக்கன், விடுப்பன் எனத் தமிழ் நலம் மேவ பலவாய்ச் சொல்லாக்கம் செய்யலாம்.
இன்றைய புதுமிகள் பலவற்றுக்கும் பொருத்தமாய்க் கலைச்சொல்லும் வடிக்கலாம்.

இவ்வமைப்பு முறையிலேயே கைவிடுகி எனும் புதுச்சொல்லை நான் முன்பு ஆக்கம். செய்தேன். இதனைத் தனித்து விடுகி எனினும் பொருந்தும். கையால் பிடிக்கப்படாமல் அணிந்து பயன்படுத்தப்படும் கருவியை hand free என்பர். இக்கருவிக்கே இச்சொல்லை நான் அமைத்தேன்.

ஆங்கிலத்தின் ஃபிரி விடுத்தல் பொருளில் பலவாய்ச் சொற்களைப் பிறப்பித்துள்ளது போல் தமிழின் விடுத்தலாலும் நாம் சொற்களை விரிக்கவியலும். இவ்வாறான சொல்லாக்கங்களை என் கலைச்சொல் அகரமுதலியில் காண்க.

தமிழின் வேர்ச்சொல் ஆராய்ச்சி புதிர்கள் பலவற்றை விடுவித்து நமக்குப் புரிதலையும் புரிவையும் நல்கும்.

# கில்லியும் கில்லாடியும்!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"ஜித்து ஜில்லாடி மிட்டா கில்லாடி
மாமா டால் அடிக்கும் கலரு கண்ணாடி"
(ரோகேஷ், தெறி)

***

நாட்டுப்புற விளையாட்டுகளில் 'உத்தி' பிரிந்து விளையாடுவதும், துணையாக வருபவனைச் 'சேத்தாளி' என்பதும் வழக்கம்.
காரைக்கால் பகுதியில் நண்பர்களை 1980களில் கூட்டாளி, சேத்தாளி, கமராது (comrade) என்று அழைத்தனர்.
இன்று திரைப்படங்களில் 'பங்காளி' என அழைத்துப் 'பங்கு' எனச் சுருக்கிவிட்டனர்.

ஆள் – ஆளுதல் – ஆளி எனப் பல்வேறு சொற்கள் புழக்கத்தில் உள்ளன.
போராளி, அறிவாளி, உளவாளி, நெசவாளி, பயிராளி, பாட்டாளி!

சாமியாடி, கூத்தாடி, வாயாடி போல
வில் – வில்லன் – வில்லி – வில்லாளன் – வில்லாளி > (வில்லாடி).
கில் – கில்லி – கில்லாளி > கில்லாடி.

"கில்லாடி: திறமையான விளையாட்டு வீரன் என்ற பொருள் கொண்ட வடமொழிச் சொல்லான கிலாடியிலிருந்து உருவானது." எனச் சென்னைத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிட்டாலும் 'கில்' என்னும் தமிழ் வேர்ச் சொல்லிலிருந்து இது பிறந்ததாகவே தோன்றுகிறது.

கல் – கல்லி = கற்றவன்.
அரட்டை கற்றவனை 'அரட்டைக் கல்லி ' என்பது மக்கள் வழக்கு.

கில் = ஆற்றல்.
கில்லி = ஆற்றல் மிகுந்தவன், ஆற்றலுடன் அடித்து ஆடும் விளையாட்டு.
கில்லாடி = வலிமையான விளையாட்டு வீரன்.

'கில்' என்பது பெயர்ச்சொல்லாகவும், வினை முதலாகவும், இடைநிலையாகவும் இருந்துள்ளது.
இன்றும் நிகழ்கால இடைநிலைகளாக உள்ள கிறு, கின்று என்பவை 'கில்– என்பதன் திரிபாகவே தோன்றுகின்றன.

கல் – கற்றான், கற்பான் என்பது போலக்
கில் – கிற்றான், கிற்பான் எனவும் வந்துள்ளது.
"மூவகைத் திருமூர்த்தியர் ஆயினும்,
பூவகத்தில், விசும்பில், புறத்தினில்,
ஏவர் கிற்பர் எதிர் நிற்க, என்னுடைச்
சேவகற்கு?" என ஐயமும் தேறினான்".
(கம்பராமாயணம், யுத்தகாண்டம).
ஏவர் கிற்பர் எதிர்நிற்ப = எதிர்நிற்கும் ஆற்றலுடையவர் யார்?

ஆற்றலுணர்த்தும் இடைநிலையாக (கில் – கில்லேன், கிற்பன்),
"அகல கில்லேன் இறையும்என்று அலர்மேல்
மங்கை உறைமார்பா
நிகரில் புகழாய் உலகமூன்
றுடையாய் என்னை ஆள்வானே
நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும்
திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா அடியேனுன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே."
(திருவாய்மொழி 6–10–10).

"வந்தாய் போலே வந்தும்,என் மனத்தினை நீ
சிந்தாமல் செய்யாய்; இதுவே இதுவாகில்,
கொந்தார்கா யாவின் கொழுமலர்த் திருநிறத்த
எந்தாய்! யான்உனை எங்குவந்து
அணுகிற்பனே?"
(திருவாய்மொழி 3–2–5).

கில் = வல்லமை; கிற்பர் = வல்லவர்,
"இட்டிதுஆக வந்து உரைமினோ! நமக்கு
இசையுமா நினைத்து ஏத்துவீர்!
கட்டி வாழ்வது நாகமோ? சடைமேலும் நாறு
கரந்தையோ?

பட்டி ஏறு உகந்து ஏறரோ படுவெண்தலைப் பலி
கொண்டு வந்து
அட்டி ஆளவும் கிற்பரோ? நமக்கு அடிகள்ஆகிய
அடிகளே."
(சுந்தரர் தேவாரம்).
ஆளவும் கிற்பரோ = ஆளவும் வல்லவரோ.
கில் > கிற்பர் – தனிப் பெயர்ச்சொல்லாக
ஆளப்பட்டுள்ளது.

கில் = ஆற்றல்,
"சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச் செங்கண்
கோடச் செய்யவாய் கொப்பளிக்க
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக் கோவிந்தன்
குழல்கொடு ஊதினபோது
பறவையின் கணங்கள் கூடுதுறந்து வந்து
சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச் செவியாட்ட கில்லாவே."
(ஆறாவது திருமொழி)

'கூற்றம் நம் மேல் வரும் ஆற்றல் உடையது
அன்று' எனப் பாடுவார் திருநாவுக்கரசர்,
"வெம்ப வருகிற்பதன்று கூற்றம் நம்மேல்
வெய்ய.." (தேவாரம்).

"முன்துறை நிறை அணி நின்றவர் மொழி மொழி
ஒன்று அல பல பல உடன் எழுந்தன்று; அவை
எல்லாம் தெரியக் கேட்குநர் யார் அவை
கில்லா கேள்வி கேட்டன சில சில;"
(பரிபாடல் – 12).
கில்லா = அறியவியலா, அறியும் திறமில்லா.

கில்லான் = ஆற்றலில்லான்
"தன்னை அகல்விக்க தானும் கில்லான் இனி"
(நாலாயிரம் – 2972).

கில்லேன் = ஆற்றலில்லேன்,
"நோவ திரிக்கில் உனக்கு இங்கு இழுக்குற்று
என் காதுகள் நொந்திடும் கில்லேன்
நாவற்பழம் கொண்டு வைத்தேன் இவை
காணாய் நம்பீ முன் வஞ்ச மகளை"
(நாலாயிரம் – 150).

"கேசவனே இங்கே போதராயே
கில்லேன் என்னாது இங்கே போதராயே"
(நாலாயிரம் – 209).

"நொந்திட மோதவும் கில்லேன்
நுங்கள் தம் ஆநிரை எல்லாம்"
(நாலாயிரம் – 1885).

"கிற்பன் கில்லேன் என்று இலன் முனம் நாளால்"
(நாலாயிரம் – 3137).

"இடகிலேன் ஒன்று அட்ட கில்லேன் ஐம்புலன்
வெல்ல கில்லேன்,
கடவன் ஆகி காலம் தோறும் பூப் பறித்து ஏத்த
கில்லேன்"
(நாலாயிரம் – 3305).

கில்லேன் – கிலேன்,
"பேரும் உடைய பிரானை அல்லால் மற்று யான்
கிலேன்
மாரி அனைய கை மால் வரை ஒக்கும் திண்
தோள் என்று"
(நாலாயிரம் – 3215).

"மாறி நின்று எனைக் கெடக் கிடந்தனையை
எம் மதி இலி மட நெஞ்சே
தேறுகின்றிலம் இனி உனை சிக்கெனச்
சிவன் அவன் திரள் தோள்மேல்
நீறு நின்றது கண்டனை ஆயினும்
நெக்கிலை இக்காயம்
கீறுகின்றிலை கெடுவது உன் பரிசு இது
கேட்கவும் கில்லேனே"
(திருவாசகம்)
காயம் – உடல். சிக்கென;
கில்லேனே – ஆற்றாமையை உணர்த்தும்
எதிர்மறை இடைச்சொல்.

"கில்லேன் வினைத்துய ராக்கு மயலானேன்
கல்லேன் அரநெறி அறியாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுள்
கல்லேன் கழியநின்று ஆடவல் லேனே."
(திருமந்திரம் – 313).

கில் + து = கிறு; கிறி (பெயர்ச்சொல்).
"அவன் ஏன் இப்படிக் 'கிறி கெட்டு'
அலைகிறான்? " என்பது நடைமுறையில் உள்ள
வழக்கு.
கிறி, கிறிசை என்பன பேச்சு வழக்கில் உள்ளன.

"பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீர்
எனக்கொருநா ளிரங்கீர்
முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே."
(சுந்தரர் தேவாரம்).
கிறி பேசுதல் = வஞ்சனையாய்ப் பேசுதல்.

கிறி (வினைச்சொல்) – கிறித்தல் – நண்பர்களிடம் குறும்பாக விளையாடுதல் (To play pranks) – மாயஞ்செய்தல்.

"முறிப்பான பேசிமலை எடுத்தான் தானும்
முதுகுஇறமுன் கைந்நரம்பை எடுத்துப் பாடப்
பறிப்பான்கைச் சிற்றுஅரிவாள் நீட்டி னானை
பாவியேன் நெஞ்சகத்தே பாதப் போது
பொறித்தானை, புரமூன்றும் எரிசெய் தானை,
பொய்யர்களைப் பொய்செய்து போது போக்கிக்
கிறிப்பானை, கீழ்வேளூர் ஆளும் கோவை,
கேடுஇலியை நாடும்அவர் கேடு இலாரே."
(அப்பர் தேவாரம்).
கிறிப்பான் – மாயம் செய்வான்.

[20-9-2012 தினமணி இணைய ஏட்டில் திருநெல்வேலி, கிறித்துவ மத போதகர் தே. இராசரீகம் (பிறப்பு 17/10/1907) என்பவர் தம் ஞான நூலில், " 'கிறித்தல்' என்னும் சொல்லடியாக மாயம் செய்தல் என்னும் பொருளில் 'கிறித்து', 'கிறித்தவர்' தோன்றின" எனக் குறிப்பிடுவதாகக் கூறப்பட்டுள்ளது.]

நம் பேச்சு வழக்கில் மிகவும் குறும்பு செய்வானை இன்றும் 'அவன் ரொம்ப கிறித்துவம் / கிறித்துருவம் பிடிச்சவன்' என்று கூறுவோம்!

"எதிர்க்கட்சியைக் 'கிழிகிழி' என்று கிழித்துவிட்டார்" என்போம்.

பேச்சு வன்மை, வினை வலிமை, வினைத் திறனே 'கிழி கிழி' என ஆகிறது.

ல – ழ – ள – ட ஆதல் இயற்கை.
தாலம் / தாளி = பனை. இதில் இறக்கப்படும் கள் – தாளி > தாடி > toddy.

ஆகவே, விளையாட்டு என்றாலும், விளையாட்டு வீரம் என்றாலும், வினைத்திறன் என்றாலும் தமிழ் வேராகக் 'கில்' தான் முன் நிற்கிறது. முன்பு வழக்கிலிருந்து, மெல்ல மெல்ல மறைந்திருக்கிறது. இன்று இலக்கிய வழக்கில் அவ்வளவாக இல்லை என்றாலும் தமிழில் பேச்சு வழக்கிலும், பிற மொழிகளிலும் நிலைபெற்றுள்ளது.

கில்(கிறி) – கேல் (இந்தி) = விளையாட்டு
கில் – கேல்நா (இந்தி) = விளையாடுதல்
கில்லாடி – கிலாடி – (இந்தி) = விளையாட்டு வீரன்
கிறி – க்ரீடக: – (சங்கதம்) = விளையாட்டு, விளையாட்டு வீரர்.

இத் திறன் குறித்ததான clever, (s)kill என்னும் ஆங்கிலச் சொற்களிலும் தமிழ்வேர் மிளிர்வதைக் காணலாம்.

clever (adj.)
1580s, "handy, dexterous, having special manual ability," apparently from East Anglian dialectal cliver "expert at seizing," perhaps from East Frisian klufer "skillful," or Norwegian dialectic klover "ready, skillful," and perhaps influenced by Old English clifer "claw, hand" (early usages seem to refer to dexterity). Or perhaps akin to Old Norse kleyfr "easy to split," from Proto-Germanic *klaubri- from PIE root *gleubh- "to tear apart, cleave." Extension to intellect is first recorded 1704.

skill (n.)
late 12c., "power of discernment," from Old Norse skil "distinction, ability to make out, discernment, adjustment," related to skilja (v.) "to separate; discern, understand," from Proto-Germanic *skaljo- "divide, separate" (source also of Swedish skal "reason," Danish skjel "a separation, boundary, limit," Middle Low German schillen "to differ," Middle Low German, Middle Dutch schele "separation, discrimination;" from PIE root *skel- (1) "to cut." Sense of "ability, cleverness" first recorded early 13c



# பொறாமை – சொற்கூற்றாய்வு

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

ஒட்டுமொழியான தமிழில் பொருண்மைக் கூறுகளை மரபுப்படி இணைத்துச் சொற்கள் ஆக்கப்படுகின்றன. சான்று: முருகு +அன் >முருகன்; பேசு+கிறு+ ஏன்> பேசுகிறேன். இதை இலக்கணம் பகுபதவுறுப்புகள் என்றும் பொருண்மைக் கூறுகள் என்று பொருண்மையியலும் இலக்கணப்படுத்துகின்றன. சான்றாக ஆடுகின்றாள் என்னும் பெண்பால் படர்க்கை வினைமுற்றில் செயல்+ காலம்+ செய்பவள் என்னும் மூன்று பொருண்மைக் கூறுகள் அடங்கியுள்ளன. இவற்றில் எந்தக் கூறு மாற்றப்படுகின்றதோ, அது குறிக்கின்ற பொருண்மை மட்டும் மாறும். [ ஆடுகின்றான்; ஆடுகின்றன ]. இம் முறையில் பொறாமை என்னும் பிறழ் உளவியல் முப்பொருட் கூற்றுக் கலைச்சொல்லை அணுகலாம்.

## பொறாமை:

மனிதன் அறிவாலும் எண்ணங்களாலும் இயக்கப்படுகின்றான். இதனால் முறையே உள்ளத் தெளிவும் குழப்பமும் ஏற்படுகின்றன. அனுபவம், எதிர்பார்ப்பு, ஒப்பீடு, தன்னம்பிக்கைக் குறைபாடு ஆகியவற்றால், பிறருடைய ஆக்கத்தை ஏற்றுக்கொள்ள இயலாத தவிர்ப்பு மனநிலை பொறாமை அல்லது ஆற்றாமை எனப்படுகின்றது. இவை பொறு+ ஆ + மை; ஆற்று+ ஆ + மை என்னும் மூன்று பொருட்கூறுகளால் ஆன கூட்டுச் சொற்களாகும். இம் மூன்று கூறுகளுள்,

பொறு/ ஆற்று என்னும் வினைப்பகுதி ஏற்றுக்கொள் என்றும்
ஆ என்னும் எதிர்மறை இடைநிலை இயலாமை எனவும்
மை என்னும் பண்புப்பெயர் விகுதி பெற்றிருத்தல்

என்றும் பொருள் சுட்டுகின்றன. இம் மூன்றையும் இணைத்துப் பொறாமை/ ஆற்றாமை என்னும், பொறுக்க / ஒப்ப இயலாமை என்னும் கருத்திலான பண்புப் பெயர்கள் ஆக்கப்படுகின்றன. இவ்வாறே கல்லாமை, கள்ளாமை, இயலாமை போல்வன இயல்கின்றன. மேலும் இத்தகைய 'ஆமை'கள் விலக்கப்படவேண்டிய பிறழ் எண்ணங்களாகும். இங்ஙனம் சொற்களின் பொருண்மைக் கூறுகளைப் பிரித்தறியின் சொற்பொருள் தெளிவாகும். இவண், 'பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்' என்னும் நல்லந்துவனார் பாடிய நெய்தற்கலி 16ஆம் பாவின் 14ஆம் அடி ஒப்பத்தக்கது.



# பாவாணர் பக்கம்

# இஞ்சி

சொல் : இஞ்சி

வழக்கிடம் : இஞ்சி[1] – இலக்கியம்

இஞ்சி[2] – தமிழகம்

சொல்வகை : பெயர்ச்சொல்

இஞ்சி[1] = கட்டிட வடிவான இடப்பெயர்

இஞ்சி[2] = அஃறிணை ஓரறிவுயிர்ப் பொருட்பெயர்.

வேற்றுமைப்பாட்டு வகை.

முதல்வகை (சாரியை யில்லது). எ–டு: இஞ்சியை, இஞ்சியால், இஞ்சிக்கு, இஞ்சியின், இஞ்சியது, இஞ்சியில்,

இயல் விளக்கம்

இஞ்சி[1] – செம்புருக்கிச் சாந்தாக வார்த்து இறுகக் கட்டிய திண்ணிய கோட்டை மதில் வகை.

இஞ்சி[2] – பித்தத்தைப் போக்குவதும், மருந்துகளிலும் கறிவகைகளிலும் பெரும்பாலும் கூட்டுச் சரக்காகச் சேர்க்கப்படுவதும், கார்ப்புச் சுவையுள்ளதுமான, கிழங்குள்ள பூண்டுவகை.

பொருளும் ஆட்சி மேற்கோளும்

இஞ்சி[1] பெ. திண்ணிய கோட்டை மதில் வகை

"கொடுங்க ணிஞ்சி" (பதிற்றுப். 16:1).

"உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின் அமைவரண் என்றுரைக்கு நூல்" (743)

என்னுந் திருக்குறளிற் குறித்துள்ள திண்மை என்னும் வகைப்படி.

"செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை"யே (புறம்.201) இஞ்சி என்னும் மதில் வகையாகும்.

இஞ்சி[2] பெ. 1. இஞ்சிப் பூண்டு: ginger–plant. "மஞ்சளும் இஞ்சியும் மயங்கரில் வலயத்து" (சிலப் 10:74). 2. இஞ்சிக் கிழங்கு: ginger–root.

ஆட்சி மேற்கோள் :

இஞ்சி[1] –"செம்பிட்டுச் செய்த விஞ்சித் திருநகர்ச் செல்வந் தேறி" (கம்பரா.யுத்த.160)

செ.சொ.பி. அகரமுதலியில் இன்னும் எண் மேற்கோள் காட்டப் பெறும் விரிவஞ்சி அவை இங்கு விடப்பட்டுள.

இஞ்சி வகை:

இஞ்சி மாங்காய் அல்லது மாங்காயிஞ்சி. ஊறுகாயாகப் பயன்படுவது; அயபேடி – பைபேநச.

கூட்டுச் சொல்:

இஞ்சிக் கிழங்கு பெ. ginger–root.

இஞ்சித்தேறு, பெ. இஞ்சித் துண்டு: small piece of green ginger.

இஞ்சிப்பாகு. பெ. இஞ்சி இளகிய (லேகிய)

வகை: a kind of ginger electuary.

இஞ்சிப் பாவை. பெ. இஞ்சிக் கிழங்கு (மலைபடு. 125. உரை). ginger, as bearing the shape of a doll.

இஞ்சி யூறுகாய் = காயச் சரக்குச் சேர்த்து எண்ணெயில் ஊற வைத்த இஞ்சி, ginger–pickle

இஞ்சி வேர், பெ.இஞ்சிக் கிழங்கு ginger root.

இஞ்சிச் 'சுரசம்' என்பதை இஞ்சிக்கருக்கு என்றும். இஞ்சி 'முரப்பா' என்பதை இஞ்சி வடிப்பு என்றும் சொல்லலாம்.

மரபு வழக்கு : இஞ்சி தின்ற குரங்குபோற் பஞ்சரித்தல் (தொந்தரவு செய்தல்).

தொடர்மொழி : இஞ்சி தின்ற குரங்கு.

உவமைப் பழமொழி : இஞ்சி தின்ற குரங்கு போல.

சொல்லமைவு :

இஞ்சி (இரண்டிற்கும் பொது. 'இள்' வேர்; 'இஞ்சு' முதனிலை; 'இ' வினைமுதலீறு.

சொல் வரலாறு:

இஞ்சி[1] : உல் – ஒல். ஒல்லுதல் = பொருந்துதல். உல் –உர்– உறு. உறுதல் = பொருந்துதல். செறிதல், வலியுறுதல். உறு– உறுதி = திண்ணம், வலிமை.

உர் –உரம் = வலிமை. உறு– உற– உறத்தல் = செறிதல், இறுகுதல். "விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே" (தொல்–சொல். 348).

உறந்த விஞ்சி = இறுகிய மதில்.

உல் –உள் – அள் = செறிவு (திவா.), வன்மை (சூடா.) அள்ளல் = நெருக்கம். அள்ளாகுதல் = செறிதல்.

அள்ளிருள் = செறிந்த இருட்டு. அள்ளுதல் = செறிதல் (சீவக. 614).

உள் –இள்– (இய்) –(இய்ஞ்சு)– இஞ்சு.

ஒ.நோ: குள் –(குய்)– (குய்ஞ்சு) – குஞ்சு.

புள் –பிள் –பிய்– (பிய்ஞ்சு) – பிஞ்சு.

கொள் – கொய். தொள் – தொய்.
பொள் – பொய்
இஞ்சுதல் = செறிதல், இறுகுதல், திணிதல்.

இஞ்சு –இஞ்சி = திணிந்த மதில் வகை.

பெரும்பாலும் செம்பு புனைந்தியற்றியதாகவும் சிறுபான்மை அரைத்த சாந்திட்டமைத்த தாகவும், பகைவரால் எளிதாகத் தாக்க

முடியாவாறு திண்ணிதாகக் கட்டப்பட்ட மதில், ஏனைவகை மதில்களினும் மிக இறுகியிருத்தல் பற்றி இஞ்சி யெனப்பட்டது.

இஞ்சி[2] : 'ஈ' அண்மையைச் சுட்டுமாறு உதட்டைப் பின்னுக்கு இழுத்தொலிக்கும் உயிரொலி. ஈ – ஈல் –ஈர் – ஈர்த்தல் = இழுத்தல். ஈர்தல் = இழுத் தறுத்தல், பல்லாற் கடித்திழுத்து உரித்தல், இழுத்தல். அறுத்தல்.

ஈல்– இல் –இள் –இழு

ஒ.நோ: கொள் கொம்பு– கொழுகொம்பு, கொள்நன் – கொழுநன்.

இழுத்தல் = பின்னிழுத்தல், உள்ளிழுத்தல், உறிஞ்சுதல்.

இள் –(இய்)–(இய்ஞ்சு) –இஞ்சு.

இஞ்சுதல் = நீரை உள்ளிழுத்தல், நிலத்தில் நீர் சுவறுதல்.

இஞ்சு –இஞ்சி = நீரை உள்ளிழுத்துத் திரண்டிருக்கும் கிழங்கு வகை, அஃதுள்ள பூண்டு.

இஞ்சி காய்ந்து நீர் வற்றினாற் சுக்கு.
இஞ்சி X சுக்கு.

சுக்கு = நீர் சுண்டி வறண்டிருப்பது.

சுள்ளுதல் (சுள்ளெனல்) = காய்தல், நீர் வற்றுதல்.

சுள் –சுள்கு– சுட்கு– சுக்கு.

ஒ.நோ: வெள்– வெள்கு –வெட்கு.

கொள்– கொள்கு– கொட்கு– கொக்கு = வளைந்த கழுத்துள்ள பறவை.

இனச்சொல்:

(1) திரவிடம் : மலையாளம்– இஞ்சி, குடகம்– இஞ்சி. கோத்தம் –இஞ்ச், பிராகிருதம் (பாலி) – சிங்கி, சிங்கிவேர.

(2) ஆரியம் : (சமற்கிருதம்) – ச்ருங்கவேர, பர்சி (பர்ஜி) சிங்கிவேர.

ME. gingivere. OFr gengibre. LL gingiber. L. zingiber. Gk. zingiberis. Skt. srngavera. E. ginger.

(3) பிறமொழிக் குடும்பம்– மலாய் : இஞ்சிவேர்.

சிறப்புக் குறிப்பு :

இஞ்சி தொன்றுதொட்டுத் தமிழ்நாட்டில் விளைக்கப்பெற்று வருவது.

"செய்யாப் பாவை வளர்ந்து கவின் முற்றிக்

காயங் கொண்டன" (மலைபடு. 125–6)

"இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கை"
(பதிற்றுப். 42: 10–11)

"மஞ்சளும் இஞ்சியும் மயங்கரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் பாற்பகை யுறுக்கும்"
(சிலப். 10: 74–5)

என்னும் பண்டையிலக்கியப் பகுதிகளால் அறியப்படும். தமிழகத்தி லிருந்து பண்டை நாளிலும் மேனாடுகட்கு ஏற்றுமதியான சரக்குகளில் இஞ்சியும் ஒன்றாகும். அது வேராயிருப்பதால் இஞ்சி வேரென்றும். கிழங்காயிருப்பதால் இஞ்சிக் கிழங்கென்றும், பாவை போன்றிருப்பதால் இஞ்சிப்பாவை என்றும் சொல்லப்படும். இஞ்சிவேர் என்னும் சொல்லே மேனாடுகளிற் பல்வேறு வடிவில் வழக்குப் பெற்றது.

திருத்தம்

சமற்கிருத ஆரியர் இஞ்சி யென்னும் தென்சொல்லை ஆரியச் சொல்லாகக் காட்ட வேண்டி, ச்ருங்கவேர எனத்திரித்து மான்கொம்பு போன்றது எனப் பொருட் கரணியங் காட்டுவாராயினர். இது செயற்கை யானதும் பொருத்தமற்றதும் ஆகும் என்பதை, வரலாறு மட்டுமின்றிச் சொல்வடிவும் தெளியக்காட்டும். வடமொழியில் சருங்க என்பது கொம்பு என்றுமட்டும் பொருள்படும். வேர என்பது உடம்பைக் குறிக்கும். இவ்விரண்டும் எங்ஙனம் இணைந்து இஞ்சியைக் குறிக்கும்? இற்றையறிவியல் களைத் தெளிய வறிந்த மேனாட்டறிஞரும். சமற்கிருத ஆங்கில அகரமுதலியிலும், இருபதாம் நூற்றாண்டு அகரமுதலியிலும், ஆக்கசுப்போர்டுச் சிற்றகரமுதலியிலும், திரவிடச் சொற்பிறப்பியல் அகரமுதலியிலும் சமற்கிருத ஆரியர் கூற்றையே தழுவியிருப்பது மிகமிக வியப்பிற்கிடமானதே. அவ் வகரமுதலிகளுள்ளும், இருபதாம் நூற்றாண் டகரமுதலி இஞ்சி வேர் என்பதை மலையா (மலாய்)ச் சொல்லாகக் குறித்திருப்பது இன்னும் வியப்பானதே. இதற்குத் தமிழர் வெளிநாட்டினின்று வந்தேறிகள் என்று தவறாகக் கருதியிருப்பதே அடிப்படையாகும். வடநாட்டுத் திரவிட மொழியாகிய பர்சியில் சிங்கிவேர என்று வழங்குவதால் மட்டும். அது வடசொல்லாகிவிடாது. அம் மொழி அதைப் பிற்காலத்து வழக்கேற்றியிருக்கலாம்.

நன்றி : பாவாணர் தமிழ்க்களஞ்சியம்




# பாவாணர் நோக்கில் தவம் – வரம்

முனைவர் வே.கார்த்திக்
பொறுப்பாசிரியர்

தவம், வரம் இரண்டும் தமிழ்ச்சொற்களா? என்ற ஐயம் இன்றளவும் பலரிடையே நிலவிவருகிறது. இந்நிலையில். மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், உலகப் பொதுமறையாம் திருக்குறளுக்கு இயற்றிய 'தமிழ் மரபுரை' வாயிலாக இந்த ஐயத்திற்கு விடைபகர்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## திருக்குறளில் – தவம்

தமிழ்மறையாம் திருக்குறளில் 27ஆவது அதிகாரம் 'தவம்' என்னும் தலைப்பிலேயே அமைந்துள்ளது. அது தவிர,

"தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்" (19)

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு" (261)

"தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது" (262)

"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்" (263)

"ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்" (264)

"வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்" (265)

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு" (266)

"தவமறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று" (274)

"மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை" (295)

"அறிவிலான் நெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
இல்லை பெறுவான் தவம்" (842)

ஆகிய 10 குறட்பாக்களில் 'தவம்' என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

## தவம் – வேரும் விளக்கமும்

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'தவம்' அதிகார முகவுரையில், "தவம் என்ற சொற்கே எரித்தல் என்றுதான் பொருள்.

துலங்குதல் = விளங்குதல்.

துலங்கு → துளங்கு = திகழ்.

துள → தள. தளதளத்தல் = திகழ்தல்.

தள → தழல் → தணல்.

தழ → தக. தகதகவெனல் = ஒளி வீசுதல்.

தக → தகம் → தங்கம் = விளங்கும் பொன்.

தக → திக → திகழ் → திங்கள் = இரவில் ஒளிதரும் சுடர்.

தகம் = எரிவு; சூடு. தகம் → தவம் = உடலை எரித்தல் போல் வருத்துந் துறவறப் பயிற்சி.

க → வ போலி. ஒ.நோ. : குழை → குகை ; குவை

தக → தஹ் (வ.)

தவம் → தபஸ் (வ.)

தக → தகை = தாகம். தகம் → தாகம் = உடற் சூட்டால் உண்டாகும் நீர் வேட்கை.

தக → தவ → தவி. தவித்தல் = நீர்வேட்கையுண்டாதல்.

தாகம் → தாஹ (வ.)

தவி → தப் (வ.)

தவம் → தவன் = தவத்தோன்.

இதற்கு ஒத்த வடிவம் சமற்கிருதத்தில் இல்லை. தபஸ்வின் என்ற வடிவந்தான் உண்டு" என்று நுட்பமுற சொற்பிறப்பியல் சொல்லி,'தவம்'சொல் தூயதமிழ்ச்சொல்தான் என்று நிறுவியுள்ளார்.

### திருக்குறளில் – வரன் – வரம்

உலகப் பொதுமறையாம் திருக்குறளில் 'வரம்' என்ற சொல் நேரடியாக இல்லை. ஆனால்,

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்தும்
காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" (54)

என்ற குறளிலுள்ள 'வரன்' என்னும் சொல்லுக்கு விளக்கமளிக்கும் போது, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'வரம்' என்ற சொல்லின் சொற்பிறப்பையும் சுட்டிச்செல்கிறார். அதனைப் பார்க்குமுன், 'வரன்' என்னும் சொல்லுக்கு ஏனைய சில உரையாசிரியர்கள் தரும் பொருளைப் பார்ப்பது தேவையாகிறது.

### உரையாசிரியர்கள் நோக்கில் 'வரன்'

மணக்குடவர் – மேலாகிய இடம்
பரிமேலழகர் – வீட்டுநிலம்
கா. சு. பிள்ளை – மேலான இடமாகிய வீடு
நாமக்கல் கவிஞர் – தெய்வீக சக்திக்கு இருப்பிடம்
தவத்திரு. குன்றக்குடி அடிகளார் – வீட்டின்பம்
சாமி சிதம்பரனார் – மோட்சம்
சி. இலக்குவனார் – மேலான நிலைமை
வ. சுப. மாணிக்கம் – மேலான நிலம்
திருக்குறளார் முனிசாமி – மேலான வீடு என்னும் பேரின்ப நிலம்
ந. சி. கந்தையா – மோட்சம்
புலவர் வெற்றிழகன் – நன்மை

இவ்வுரையாசிரியர்களின் கருத்துகளையெல்லாம் ஒருங்கு தொகுத்துப் பார்க்கையில் 'வரன்' என்பதற்கு 'மேலான நன்மை' என்பது பொருளாவதை உணரமுடிகிறது.

### வரம் – வேரும் விளக்கமும்

மேற்சுட்டிய குறளிலுள்ள 'வரன்' என்னும் சொல்லை விளக்குமிடத்துப் பாவாணர், " 'புரையுயர் பாகும்' (தொல். 785) 'புரம் = மேல், மேன்மாடம், உயரமான கட்டடம், கோபுரமுள்ள நகர்.
கோபுரம் = அரசனிருக்கும் உயரமான கட்டடம், உயரமான காவற் கூண்டு
புரம் → பரம் = மேல், மேலிடம், மேலுலகம்
பரம் → வரம் = மேன்மை
வரம் → வரன் (கடைப்போலி) = மேலுலகம், வீட்டுலகம்" என்று சொற்பிறப்பைச் சுட்டி விளக்கி, 'வரம்' என்பது 'மேன்மை'யைக் குறிக்கும் தூயதமிழ்ச் சொல்தான் என்பதையும் நிலைநாட்டியுள்ளார்.

நிறைவாக, பிறமொழிச் சொற்கள் பெரிதும் கலவாத சங்க இலக்கியத்துள்ளும் 'தவம்' என்ற சொல் (பொரு.91, நற். 226–2, ஐங். 111–5, பதி.74–26, பரி.11–90, 11–138, பரி. தி. 1–18, கலி.30–1, 59–13, 138–30, 139–33, புற. 358–3,) 13 இடங்களிலும், தவசியர் (நற்.141–5), தவத்தோன் (புற. 1–13), தவப்பள்ளி (பட்.53), தவமுதல்வர் (பரி.8–9), தவமுதல்வன் (கலி. 100–7) ஆகிய சொற்கள் முறையே ஓரிடத்திலும். 'வரம்' என்ற சொல் (திரு.94, பரி. 5 –30, 8 –105) ஆகிய மூன்று இடங்களிலும் பயின்றுவந்துள்ளதிலிருந்தும், மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் வேராய்வு விளக்கத்திலிருந்தும் 'தவம்' 'வரம்' ஆகிய இரண்டும் தூய தென்தமிழ்ச் சொற்களே என்று தெளியலாம்.

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி!

## திருநின்றவூர், ஜெயா கலை (ம) அறிவியல் கல்லூரி மாணவ – மாணவியர் பயன்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), திருநின்றவூர் ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவ – மாணவிகளுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்துப் பயிற்சியளிக்கப்பட்டது. சொற்குவை வலைத்தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல் உள்ளிட்டவை குறித்த விழிப்புணர்வை இளைய தலைமுறையினரிடம் விதைக்கும் வகையில், அகரமுதலி இயக்ககத்தில் கல்லூரி மாணவர்களுக்கு அகப்பயிற்சி வழங்கப்பட்டுவருகிறது. அந்தவகையில், 10.06.2024 முதல் 21.06.2024 வரை, திருநின்றவூர் ஜெயா கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறையைச் சார்ந்த 6 மாணவ–மாணவிகளுக்கு அகப்பயிற்சியளிக்கப்பட்டது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் திருமதி க. பவானி அவர்கள் மாணவ–மாணவிகளுக்கு இயக்ககச் செயற்பாடுகள் குறித்து எடுத்துரைத்தார். சொற்குவை குறித்து திரு. வே. பிரபு, மொழிபெயர்ப்பு குறித்து முனைவர் தி. பாலசுப்பிரமணியன், அகராதியியல் விளக்கம் பற்றி திரு. கி. இராமர், கணினித் தமிழ் குறித்து கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு. பிந்து ஆகியோர் பயிற்சியளித்தனர். மேலும், சொற்பிறப்பியல் குறித்து முனைவர் மா.பூங்குன்றன், கலைச்சொல்லாக்கம் குறித்து திருமதி ஜெ. சாந்தி, தனித்தமிழ்ப் படைப்புகள் பற்றி திரு. சு. வீரவேலு, வேர்ச்சொல்லாய்வு குறித்து முனைவர் வே. கார்த்திக் ஆகியோர் பயிற்சியளித்தனர். நிறைவு நாளான 21.06.2024ஆம் நாள் மாணவ – மாணவிகளுக்குப் பயிற்சியளிக்கப்பட்ட பகுதிகளிலிருந்து அவர்களின் புரிதலை அறியும் வகையில் தேர்வு நடத்தப்பெற்றது. நிறைவு விழாவில் பேசிய அகரமுதலி இயக்குநர் திருமதி க. பவானி அவர்கள், "இங்குப் பெற்ற பயிற்சியினை மாணவ – மாணவிகள் தங்களின் நட்பு வட்டத்திற்கும் தெரிவித்து, மொழிக் கலப்பில்லாத தூயதமிழைத் தொடர்ந்து பயன்படுத்துவதோடு, கலைச்சொல்லாக்கம் மற்றும் சொற்குவை மின்னகராதி பயன்பாடு குறித்த விழிப்புணர்வை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு சேர்க்க வேண்டும்.

இது குறித்த செய்திகளைத் தங்களின் பாடத்திட்டத்தில் சேர்ப்பதற்கும் மாணவ – மாணவிகள் முயற்சியினை முன்னெடுக்க வேண்டும்" என்று தெரிவித்தார். பயிற்சியை நிறைவுசெய்த மாணவிகளுக்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் அவர்கள் அரசு சான்றிதழ் வழங்கி வாழ்த்துத் தெரிவித்தார்.

# செய்தி நறுக்குகள்

செவ்வாய்க்கிழமை, 25 ஜூன் 2024

## ‘அகரமுதலி’ திட்ட இயக்கக செயல்பாடு: அரசு விளக்கம்

**சென்னை, ஜூன் 24:** அகரமுதலி திட்ட இயக்ககம், தமிழ் வளர்ச்சித் துறையின் கீழ் தொடர்ந்து இயங்கும் என்று செய்தி மற்றும் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் மு.பெ.சாமிநாதன் உறுதிபடத் தெரிவித்தார்.

பேரவையில் அந்தத் துறையின் மானியக் கோரிக்கை மீது திங்கள்கிழமை நடைபெற்ற விவாதத்தில் பேசிய தமிழக வாழ்வுரிமை கட்சி தலைவர் வேல்முருகன், அகரமுதலி திட்ட இயக்கத்தை வேறொரு துறையின் கீழ் இயங்கச் செய்ய முடிவு செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது என்றார்.

அதற்கு பதிலளித்த அமைச்சர் மு.பெ.சாமிநாதன், இது தவறான கருத்து. அது போன்ற முன்மொழிவுகள் ஏதும் இல்லை என்று விளக்கம் அளித்தார்.

6 சென்னை 23-6-2024

## கல்லூரி மாணவர்களுக்கு அகர முதலி இயக்ககம் சார்பில் பயிற்சி

MaalaiTamizhagam Even

